# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - ஆனி - 2017 - ஜுன்

௦௯

29.05.2017 அன்று நாச்சியப்ப சுவாமிகளின் 95 ஆவது பிறந்த நாள் விழாவில் நூல் வெளியிடும் காட்சி.
இடம் இருந்து வலம்: பேரா. கார்மேகம், புதுக்கோட்டை தவத்திரு தயானந்த சந்திரசேகர சுவாமிகள், சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள், முனைவர் விசாலாட்சி சுப்பிரமணியன், முனைவர் சே. குமரப்பன்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - ஆனி - 2017 - ஜூன் இதழ் - 60

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்

1. ஆசியுரை 2
2. பட்டினத்தார் பைந்தமிழ் 4
3. திருக்குறள் 8
4. திருமந்திரம் காட்டும் ஆசிரியர் 14
5. மடாலய நிகழ்வுகள் 21
6. திருவிளையாடற் புராணம் 22

தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

தேனாறு பாய்கின்ற திருத்தலமாம் கோவி லூரில்
வீற்றிருக்கும் திரிபுவனை என்னும் தேவி
தேடிவந்த அடியவரைக் காத்து நிற்பாள்

வானேறு மதிபோலும் வதனமதி கொண்டாள்
வளர்மதியை முடிக்கணிந்த புவன நாதன்
வாளீசன் விடையேறி வந்த பெம்மான்

ஊனேறு சூலத்தன் மெய்யிலே பாதியாகி
உலகத்தான் தான்வணங்கக் கோயில் கொண்டாள்
உம்பருக்கும் அருள்வாளாய் உள்ள நங்கை

கானேறு கொன்றையணி கண்ணுதலின் துணையாகிக்
காணுகின்ற கண்ணாளாய்க் காணும் நெல்லை
காலமெலாம் தொழுவார்க்கே அச்சம் இல்லை.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர் .நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

தனக்கு இயல்பான பழக்க வழக்கங்களைக் கொண்டு வாழ்க்கை நடத்துகின்ற காலத்திலே மனச்சஞ்சலமோ, துயரமோ ஏற்படுவதில்லை. அதே போல அதீத மகிழ்ச்சியும் வருவதில்லை. ஒரு குறிப்பிட்ட குறுகிய வளையத்திற்குள்ளே இயங்க வேண்டிய கட்டாயமோ, அழுத்தமோ நேருகின்ற காலத்திலே கண்டிப்பாக மனதில் பதட்டமும், அதன் காரணமாக மனத்துயரும், சோர்வும் ஏற்படுகின்றன. இந்த நிலையை யாவரும் அவர்களுடைய அன்றாட வாழ்க்கையிலே சந்தித்திருப்பார்கள்.

ஒரு குறிக்கோளும் இல்லாத வாழ்க்கையும் தொண்டு உள்ளம் சேராத பண்பும், யாருக்கும் எவ்விதப் பயனும் அளிப்பதில்லை. வாழ்வில் அடைய வேண்டிய குறிக்கோளை, இலட்சியத்தை, பலமுறை சிந்தித்துத் தீர்க்கமாக முடிவு செய்து கொண்டு அதனை அடைவதற்கு வேண்டிய திட்டங்களை வகுத்து அதனைப் பொறுமையாக இயல்பாக அதிகச் சிரமமில்லாமல் கடைப்பிடிக்க ஏதுவாகச் செயல்முறைகளை அமைத்துக்கொண்டு செயல்பட்டால் திண்ணமாகக் குறிக்கோளை அடைய முடியும், சிறப்பாக உயர முடியும். கட்டாயம் காரணமாகவோ அல்லது கால மாற்றத்தின் காரணமாகவோ நாம் விரும்பியவற்றைச் செயல்படுத்த இயலவில்லை என்ற சூழ்நிலை யாவருக்கும் ஏற்படலாம். அதனால் துயரப்பட வேண்டிய அவசியமோ, சோகமடைய வேண்டிய கட்டாயமோ கிடையாது. நடைபெறாத செயல்பாடுகளை அதனை முயன்ற காலத்திலே ஏற்பட்ட அனுபவத்தின் வழியாக, வேண்டிய அவசியமான மாற்றங்களைச் செய்து காரியங்களைச் செயல்படுத்த முடியும். இதனால் சற்றுக் காலதாமதம் ஆகலாமே தவிர நமக்குத் தோல்வி கிட்டாது. ஏதோ ஒரு காரணத்தினாலே நாம் திட்டமிட்ட காரியங்கள் நிறைவேற வழியில்லை என்றாலும் வருத்தமடையாது அந்தச் செயலினாலே ஏற்பட்ட அனுபவத்தைக் கொண்டு நிறைவேற்றிக்

கொள்ளக்கூடிய மற்ற நல்ல காரியங்களை இலக்காகக் கொண்டு செயல்படலாம்.

பொதுவாக எந்தக் காரியத்தையும் பதற்றமின்றி நம்பிக்கையோடும், திடமான நெஞ்சோடும் செய்கின்றபொழுது தவறுகள் ஏற்பட வாய்ப்புக்கள் மிகக் குறைவு; நாம் செய்கின்ற காரியங்களிலே தவறுகள், பிழைகளும் நேர்வதற்கு முதல் காரணம் நம்பிக்கையின்மையும், பதற்றமுமே ஆகும்.

நாம் எவ்வளவு கவனத்தோடும், அக்கறையோடும் திட்டமிட்டு இருந்தாலும் சில நேரங்களில் தவறுகள் நேரலாம். அல்லது அவசரமாக சில செயல்களைச் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட வாய்ப்புண்டு **(Crisis Management)**. அந்தச் சூழ்நிலையில் நம்மாலே இந்தக் காரியங்களை வெற்றிகரமாக முடிக்க முடியும் என்கிற தன்னம்பிக்கையோடு நம் இயல்பிலே சற்றே வேகமாகச் செய்தோம் என்றால் தவறுகள், பிழைகள் ஏற்பட வாய்ப்பு மிகக் குறைவு. எனவே தடம் தவறுகின்ற காலங்களிலே அவசரகாலத் திட்டமாக ஒரு மாற்றுத் திட்டத்தைச் செய்யத் திட்டமிடல் அவசியம்; நம்முடைய செயல்களிலே எக்காரணம் கொண்டும் பதட்டமோ, பொறுமையின்மையோ சேர்ந்துவிடாமல் கவனம் தேவை. தவறினால் தவறுகள் நேர்வது தவிர்க்க இயலாததாகிவிடும். இவை நமக்கும் துயரம்; நமக்கு உதவியவருக்கும் துயரத்தைக் கொடுக்கும்.

எந்தக் காரியத்தைச் செய்ய விரும்புகிறோமோ அதனை நம்முடைய இயல்பின் வழியாகத் திட்டமிட்டுச் செம்மையாகத் தொடர் முயற்சியிலே செய்தாலே வெற்றிக்கு வழிவகுக்கும். நம் மனதிற்கும் திருப்தியும் மகிழ்ச்சியும் கொடுக்கும்.

நாம் இயல்பாக முயலுவோமாக! வெற்றிகள் பெறுவோமாக!

**ஆசீர்வாதங்கள்!**
**ஸ்ரீ சற்குருநாதன் துணை**

# பட்டினத்தார் பைந்தமிழ் - 8

தமிழாகரர் தெ. முருகசாமி

(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

பட்டினத்தார் என்றதுமே அனைவரது நினைவிலும் அவரது துறவு வாழ்வும் அவர் வற்புறுத்தும் நிலையாமையாகிய கருத்துக்களுமே நிழலாடும். இங்ஙனம் கூறுவதால் அனைவரும் துறவறம் மேற் கொள்ள வேண்டும் என வற்புறுத்துவதாகக் கருதக் கூடாது. உலகின் இயல்பைக் கூறி அதில் வாழ்வாங்கு வாழும் எதிர்நீச்சல் வாழ்வால் நிலைப்பதற்கான எதிர்மறை அறிவுறுத்தலாகக் கருதவேண்டும். இந்த உண்மையைப் பட்டினத்தார் கோயில் நான் மணி மாலையில் 28, 32, 36, 39 என்ற எண்களுடைய பாடல்களில் பதிவு செய்து கூறியுள்ளார்.

மனமே! தேரின் - மாயப் பேய்த்தேர் போன்றும் நீப்பரும் உறக்கத்துக் கனவு போன்றும் நனவுப் பெயர் பொதுவில் நாடகம் நவிற்றும் ஒரு பெருங் கடவுள்! ஏனோர் என்னை நல்லன் எனினும் என்க அல்லன் எனினும் என்க! (யான்) இன்பத்து அழுந் தினும் துன்பந் துதையினும், இருக்கினும் இறக்கினும்
வேண்டலும் இலனே! வெறுத்தலும் இலனே! - ஏனெனில் ஆண்டகைக் குரிசில்! நின் கிடையாச் செல்வம் அதாவது யாருக்கும் கிட்டாத திருவருட் செல்வம் கிடைத்து விட்டால் எனக்கு நிலையாமையே இல்லை! (36) என்றும் சிந்தனை ஒய்வொடு நடைகெட அலைவேன், அம்பலம் மேவிய சிவனை நினைக்கும் தவம் சதுராவது - (39) என்றும் நிலையாமையைக் கூறினார்.

மேற்கண்டவாறாகக் கூறப்படும் நிலையாமை பற்றிய கருத் தெல்லாம் வழிவழியாகப் பேசப்பட்டு வந்தவையேயாகும்.

மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே எனப் புறநானூற்றில் (27) பிறந்து இறந்து, இறந்து பிறந்து வரும் மனிதப் பிறப்பைக் குறிக்கிறார் உறையூர் முதுகண்ணன் சாத்தனார்.

யாக்கை செல்வம் இளமை நில்லா தீங்கு உணர்வுடை மாக்களுக் குரைக்கல் வேண்டா - என்கிறார் இளங்கோவடிகள்.

இத்தகு நிலையாமையைப் பலர் கூறியிருப்பினும் பட்டினத்தாரின் அனுபவப் பனுவல் வாசகங்கள் பகலன்ன வாய்மையாய்ப் பளிச்சிடுவனவாக உள்ளன.

ஆக வாழ்க்கை நிலையாமைத் தத்துவத்தை உடையதாயினும் அதனை நிலைக்கவைக்கப் பட்டினத்தார் அம்பலவர் அங்கணர் - அடைந்தவர் தமக்கே அன்புடையர் என்பதால் வாழ்வாகவும் தங்கள் வைப்பாகவும் அன்பர்கள் தில்லையம் பலத்தானை யன்றிவே றொருவரையும் தாழார் என்கிறார்.

இங்ஙனம் சார்ந்தாரைக் காக்கும் தலைவனாம் தில்லைக் கூத்தனின் திறனை, இருவேறு நிலைகளில் அதாவது அவனின் அறக்கருணை மறக்கருணைகள் பற்றிக் கூறுவதன் மூலம் (40 காடல்) விளக்கி அவனை அண்டுவோரே நிலை வாழ்வைப் பெறுவர் என்கிறார் பட்டினத்தார்.

சதுர்முகன் தந்தைக்கு எனத் தொடங்கும் பாடல் போற்றி போற்றி நின் பொலம்பூ அடிக்கே என 54 வரிகளில் முடிகிறது. இதில் தமிழ் அருச் சனைக்குரியதாகப் போற்றி என்ற சொல் 25 முறை கையாளப்பட்டுள்ளது.

போற்றி என்பது வணக்கத்தைக் குறித்தாலும் போற்றிய என வியங்கோள் நிலையில் கூறுவதன் சுருக்கமாகவும் அமைந்துள்ளது.

திருமால் தன்னை வழிபட்டதன் காரணமாக அவருக்குச் சிவபெருமான் சக்கரப் படையைத்தந்தான்,அவ்வாறே பக்தியுடன் வழிபட்டு வந்த குபேரனுக்கு அளவற்ற நிதிக்குவியல் களான சங்கநிதி, பதுமநிதி களை அருளிய தோடு குறையாத வளமுடைய நகரமான அளகாபுரி என்னும் பெருநகரத்தையும் தந்தார்.

பக்தியில் குறையாத நம்பிக்கையுடன் இருந்து சிவன் சேவடியை அடைக்கலமாகக் கொண்ட மார்க்கண்டேயனுக்கு எமபயம் போக்கியருளினார்.

தேவாசுரர்களின் நடுக்கம் நீங்கக் கடலில் எழுந்த நஞ்சை யுண்டு காலந்தாழ்த்தாமல் காத்தருளினார்.

மக்களுக்குத் தொடர்ந்து தீங்குசெய்திருந்த முப்புராதிகளை அழித்து அனுக்கிரகம் செய்தார். இதில் இருவரைத்தம் கோயில்

காவலர்களாக்கிக் கொண்டார். மற்றொருவரை முழவு வாசிப்பவராக்கிக் கொண்டார். இவ்வாறு செய்ததில் மறக் கருணையும் அறக்கருணையும் ஒரு சேர உணரப்பட்டன எனலாம்.

சிவபெருமானின் தவத்தைக் கலைக்கத் தேவர்களால் அனுப்பட்டபட்ட மன்மதன் மலரம்புகளை வீசினான். யோகம் கலைந்த சிவன் தன் நெற்றிக் கண்ணால் எரித்தார்.

அட்டவீரத்தில் ஒன்றாக யானைமுக அசுரனை அழித்து அந்த யானையின் தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்திக் கொண்டார்.

கயிலையில் சிவபெருமானை வழிபட்டுவரச் சென்ற இராவணன் வழியே தடையாயிருந்த வெள்ளி மலையைத் தூக்கி எறிய, தன்தோள் வலியால் முனைந்த போது மலைக்கு அடியில் அகப்பட்டு அலறினான். பின்னர் சிவபெருமானுக்கு விருப்பமான சாமகீதம் பாடி விடுதலையானான். இதில் சிவபெருமானின் மறக்கருணையும் அறக் கருணையும் ஒருசேர அமைந்துள்ளன.

ஆணவத்தால் சிவவேடம் தரித்து வந்து சிவபெரு மானையே எதிர்த்த சலந்தரா சூரனைத் தண்டம் செய்தார்.

ஆநிரைகளை மேய்க்கும் விசாரசருமன் என்பவர் மணலால் இலிங்கம் செய்து, பசுவின் பால் கறந்து அபிசேகம் செய்து வழபட்டதையறிந்த தந்தை ஒருநாள் வழிபாட்டிற்குரிய பாலைக் காலால் இடறியதால் சினந்தமகன் விசாரசருமன், தன் தந்தை என்றும் பாராமல் தந்தையின் காலை வெட்டினான். இந்த அதீத பக்தியை மெச்சிய சிவபெருமான் விசார சருமனுக்குச் சண்டீசப் பதந்தார். இதில் மகன் செய்த தீமையைப் (மறத்தை) பொருட்படுத்தாமல் ஈசன் அறக்கருணை செய்தார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மகனையே கறிமைத்துக் கொடுத்த சிறுத் தொண்டருக்கு அனுக்கிரகம் செய்த திருக்கோலமே கோலம் எனும்படி அருள் பாலித்தார்.

விளக்கின் நெய்யைக் குடிக்கும் பொருட்டு வந்த சிறிய எலியானது விளக்கைத் தன்னை யறியாமல் தூண்டியதால் அவ் விளக்குப் பிரகாசமாக எரிந்ததால் தன்னையறியாமல் செய்த

தொண்டிற்காக அவ் எலிக்கு அடுத்த பிறவியில் மூவுலகை ஆளுமாறு அருள்செய்தார்.

நரசிங்க அவதாரத்தில் திருமால் இரணியனைக் கொன்றபின் நரசிங்கம் வெறியடங்காமல் திரிந்த போது சிவபெருமான் சரபப் பறவையாய் வெளிப்பட்டு நரசிங்கத்தின் ஆற்றலை அடக்கினார்.

அயனும் அரியும் அடிமுடி தேடியும் காணாத நிலையில் அவர்கள் நடுவே நெருப்புப் பிழம்பாகி நின்ற அவ்விருவரின் ஆணவத்தை அடக்கினார்.

இப்படியாகத் தனித்த அறக்கருணையையும் தனித்த மறக் கருணையையும் கூறி ஒருசிலவற்றில் அறமறக் கருணைகளை ஒருசேர உணர்த்தியும் பட்டினத்தார் சிவபெருமானைப் போற்றிப் பரவினார், இந்தப் போற்றிப் பாடலோடு கோயில் நான்மணி மாலையை நிறைவு செய்கிறார்.

அந்தாதித் தொடையில் பாடப்பட்ட இம்மாலை பூ எனத் தொடங்கி பூ வழக்கே என நிறைவு பெறுகிறது.

இப்படியாகப் பதினோராம் திருமுறையில் பட்டினத்தாரின் ஐந்து பாடல்களில் முதலாவதாகப் பாடப்பட்ட இக்கோயில் நான்மணி மாலையின் பாடல்களுக்கு மேலாகக் கூறப்படும் பட்டினத்தார் திரட்டு என்னும் தலைப்பில் கோயில் திரு அகவல் எனும் தலைப்பில் 3 பாடலும் மற்றும் பிற பிற பாடல்களும் கண்டறியப்பட்டதாய் பட்டினத்தார் பாடினவாகக் கூறப்படுகின்றன.

அவைகள் சொல்லாலும் சொற்பொருளாலும் பதினோராம் திருமுறைப் பட்டினத்தார் பாடல்களுடன் பொருந்தாததால் திருமுறைகளில் சேரக்கப் பெறவில்லை, இனிப் பட்டினத்தாரின் திருக்கழுமல மும்மணிக் கோவைப் பாடல்களைக் காண்போமாக.

*(தொடரும்...)*



## திருக்குறள் தெளிவுரை
(ம. கார்மேகம்)

### புறம் கூறாமை
(ஒருவரைக் காணாத போது அவரைப் பற்றி இகழ்ந்து கூறாதிருத்தல்)

1. அறம் கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறம் கூறான் என்றல் இனிது.

அறம் கூறான் - அறத்தைப் பேசாதவன்; அல்ல செயினும் - தீங்குகள் செய்தாலும்; ஒருவன் புறம் கூறான் - பிறரைப் பற்றி அவரைக் காணாதபோது ஒருவன் இகழ்ந்து கூறாதவன்; என்றல் இனிது - என்று கூறுதல் இனியதாகும்.

அறம் பேசாத ஒருவன் தீங்குகள் செய்தாலும் அவன் பிறரைக் காணாத போது அவரைப்பற்றி இகழ்ந்து கூறமாட்டான் என்னும் சொல்லே இனிதாகும்.

2. அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன் அழீஇப் பொய்த்து நகை.

அறன் அழீஇ - அறத்தை அழித்து; அல்லவை செய்தலின் - தீங்கினைச் செய்தலைவிட; தீதே - தீங்காகும்; புறன் அழீஇ - ஒருவரைக் காணாதவழி இகழ்ந்து பேசி; பொய்த்து நகை - பின்னர் பொய்யாக அவரைக் கண்டு நகைப்பது.

ஒருவரைக் காணாத போது இகழ்ந்து பேசி அவரைக் கண்டபோது நகைப்பது என்பது அறத்தை அழித்துத் தீங்கு செய்தலைவிடத் தீங்காகும்.

3. புறம் கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறம்கூறும் ஆக்கம் தரும்.

புறம்கூறி - ஒருவரைப் பற்றி இகழ்ந்து கூறி; பொய்த்துயிர் வாழ்தலின் - பொய்யாக நடித்து உயிர் வாழ்வதை விட; சாதல் - அந்த உயிரை விட்டுவிடுதல்; அறம் கூறும் - அறநூல்கள் சொல்கின்ற; ஆக்கம் தரும் - உயர்வைத் தரும்.

ஒருவரைப் பற்றி இகழ்ந்து கூறிப் பொய்யாக நடித்து உயிர் வாழ்வதை விட அந்த உயிரை விட்டு விடுதல் அறநூல்கள் சொல்கின்ற உயர்வைத் தரும்.

4. கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல்.

கண் நின்று - ஒருவன் பார்வைக்கு முன்னே நின்று; கண் அறச் சொல்லினும் - கண்ணோட்டம் இன்றிச் சொன்னாலும்; சொல்லற்க - சொல்லக் கூடாது; முன்இன்று - அவன் முன்னே இல்லாத போது; பின்நோக்காச் சொல் - பின்விளைவுகளை எண்ணாமல் இகழ்ந்து சொல்லும் சொல்லை.

ஒருவன் பார்வைக்கு முன்னே நின்று கண்ணோட்டம் இன்றிச் சொன்னாலும் அவன் முன்னால் இல்லாத போது பின் விளைவுகளை எண்ணாமல் அவனை இகழ்ந்து சொல்லும் சொல்லைச் சொல்லக் கூடாது.

5. அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம் சொல்லும்
புன்மையால் காணப் படும்.

அறம் சொல்லும் - நன்மை சொல்லுகின்ற; நெஞ்சத்தான் அன்மை - மனமுள்ளவன் இல்லை என்பது; புறம் சொல்லும் - புறம் பேசுகின்ற; புன்மையான் - சிறுமைக் குணத்தினாலே; காணப்படும் - அறிந்து கொள்ளப்படும்.

புறம் பேசுகின்ற குணத்தினால் ஒருவன் நன்மை சொல்கின்ற மன முள்ளவன் இல்லை என்பது அறிந்து கொள்ளப்படும்.

6. பிறன்பழி கூறுவான் தன்பழி உள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும்.

பிறன்பழி கூறுவான் - பிறன் ஒருவனைப் பற்றிப் பழி கூறுபவன்; தன்பழியுள்ளும் - தன்னுடைய பழிகளுக்கு உள்ளே; திறன் தெரிந்து - துன்பம் தருவனவற்றைத் தெரிந்து; கூறப்படும் - பழி சொல்லபட்டவனால் கூறப்படும்.

பிறன் ஒருவனைப் பற்றிப் பழி கூறுபவனுடைய பழிகளுக்குள்ளே துன்பம் தரும் தன்மை உடைய பழிச் சொல் பழிசொல்லப் பட்டவனால் கூறப்படும்.

7. **பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி**
**நட்பு ஆடல் தேற்றா தவர்.**

பகச் சொல்லி - தம்மைப் பிரியுமாறு புறங்கூறி; கேளிர்ப் பிரிப்பர் - சுற்றத்தினரையும் பிரித்துவிடுவர்; நகச்சொல்லி - மகிழ்வான சொற்களைச் சொல்லி; நட்பு ஆடல் - நட்புக் கொள்ளுதலை; தேற்றாதவர் - அறியாதவர்.

மகிழ்வான சொற்களைச் சொல்லி நட்புக் கொள்ள அறியாதவர்கள் தம்மைப் பிரியச் செய்யும் வகையில் புறங்கூறிச் சுற்றத்தினரைப் பிரித்துவிடுவர்.

8. **துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினர்**
**என்னைகொல் ஏதிலார் மாட்டு.**

துன்னியார் - நெருங்கியவர்கள்; குற்றமும் தூற்றும் - குற்றத்தையும் பழிசொல்லும்; மரபினர் - இயல்பினை உடையவர்; என்னைகொல் - எத்தகையவரோ? ; ஏதிலார் மாட்டு - அயலாரிடத்தில்.

நெருங்கியவர்களின் குற்றத்தையும் பழிசொல்லும் இயல்புடையவர்கள் அயலாரிடத்தில் எத்தகையவராய் இருப்பர்.

9. **அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்**
**புன்சொல் உரைப்பான் பொறை.**

அறன்நோக்கி - அறத்தைக் கருதி; ஆற்றுங்கொல் - பொறுத்துக் கொள்ளுமோ?; வையம் - உலகம்; புறன் நோக்கி - புறத்தே போனதை அறிந்து; புன்சொல் உரைப்பான் - பழித்துக் கூறுபவனை; பொறை - சுமையை.

ஒருவன் புறத்தே போனதை அறிந்து அவனைப் பழித்துக் கூறுபவனின் சுமையை உலகம் அறத்தைக் கருதிப் பொறுத்துக் கொள்ளுமோ?

**10. ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.**

ஏதிலார் – அயலார்; குற்றம்போல் – குற்றத்தைப் போல; தம் குற்றம் காண்கிற்பின் – புறம் கூறுவார் தம்முடைய குற்றத்தையும் உணர்ந்து விட்டால்; தீதுண்டோ – தீங்கு உண்டோ; மன்னும் உயிர்க்கு – நிலைபெற்ற உயிர்களுக்கு;

அயலாருடைய குற்றத்தைக் காண்பது போலத் தம்முடைய குற்றத்தையும் புறம் கூறுவார் உணர்ந்து விட்டால் நிலைபெற்ற உயிர்களுக்குத் தீங்கு உண்டோ? உண்டாகாது.

## பயன்இல சொல்லாமை

(எந்த வகையிலும் பயனில்லாத சொற்களைச் சொல்லா திருத்தல்)

**1. பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.**

பல்லார் முனியப் – பலரும் கேட்டு வெறுக்குமாறு; பயன்இல – பயன் இல்லாத ; சொல்லுவான் – சொற்களைச் சொல்லுகிறவன் ; எல்லாரும் – எல்லாராலும் ; எள்ளப் படும் – இகழப் படுவான்.

பலரும் கேட்டு வெறுக்குமாறு பயனில்லாத சொற்களைச் சொல்லுகிறவன் எல்லோராலும் இகழப்படுவான்.

**2. பயன்இல பல்லார்முன் சொல்லல் நயன்இல
நட்டார்கண் செய்தலின் தீது.**

பயன்இல – பயனில்லாத சொற்களை ; பல்லார் முன் சொல்லல் – பலர்முன் நின்று ஒருவன் சொல்லுதல் ; நயன்இல – நன்மை தராதவற்றை ; நட்டார்கள் – தம்மிடம் நட்புக் கொண்டவரிடம் ; செய்தலின் தீது – செய்தலைவிடத் தீங்காகும்.

பலர்முன் நின்று ஒருவன் பயனில்லாத சொற்களைக் கூறுதல் தன்னிடம் நட்புக் கொண்டவரிடத்து நண்மைதராத செயல்களைச் செய்வதைவிடத் தீங்காகும்.

3. **நயன்இலன் என்பது சொல்லும் பயன்இல**
**பாரித்து உரைக்கும் உரை.**

நயன்இலன் என்பது - விரும்பத்தக்கவன் இலன் என்பதனை ; சொல்லும் - கூறும் ; பயன்இல - பயனில்லாத சொற்களை ; பாரித்து - விரித்து ; உரைக்கும் உரை - ஒருவன் சொல்லும் சொற்கள்.

ஒருவன் விரும்பத்தக்கவன் இலன் என்பதனை அவன் விரித்துரைக்கும் பயனில்லாத சொற்களே கூறிவிடும்.

4. **நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்**
**பண்புஇல்சொல் பல்லார் அகத்து.**

நயன்சாரா - விரும்பப் படாமல் ; நன்மையின் நீக்கும் - நல்ல பண்புகளிலிருந்து நீக்கிவிடும் ; பயன்சாராப் - பயன்படாத ; பண்புஇல் சொல் - பண்பில்லாத சொற்கள் ; பல்லார் அகத்து - பலருக்கிடையே.

பலருக்கிடையே நின்று பேசப்படும் பயன்படாத பண்பில்லாத சொற்கள் ஒருவனை விரும்பப் படாமல் நல்ல பண்புகளிலிருந்து நீக்கிவிடும்.

5. **சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல**
**நீர்மை உடையார் சொலின்.**

சீர்மை சிறப்பொடு நீங்கும் - பெருமைக்குரிய தன்மையும் சிறப்பும் நீங்கிவிடும் ; பயன்இல - பயனில்லாத வற்றை ; நீர்மை உடையவர் சொலின் - நல்ல இயல்புடையவர்கள் சொன்னால் ;

நல்ல இயல்புடையவர்கள் பயனில்லாதவற்றைச் சொன்னால் அவர்களில் பெருமையும் சிறப்பும் நீங்கிவிடும்.

6. **பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்**
**மக்கட் பதடி எனல்.**

பயனில்சொல் - பயனில்லாத சொற்களை ; பாராட்டு வானை - பலபடச் சொல்லுபவனை மகனெனல் - மகன் என்று சொல்லக் கூடாது ; மக்கட் பதடி எனல் - மக்களுக்குள் நெற்பதர் போலப் பயனற்றவன் என்று கூற வேண்டும்.

பயனில்லாத சொற்களைப் பலபடச் சொல்லிக் கொண்டே இருப்பவனை மகன் என்று சொல்லக் கூடாது ; மக்களுக்குள் நெற்பதர்போலப் பயனற்றவன் என்று கூற வேண்டும்.

**7. நயன்இல சொல்லினும் சொல்லுக சான்றோர்**
**பயன்இல சொல்லாமை நன்று.**

நயன்இல சொல்லினும் சொல்லுக - விரும்பத்தகாத சொற்களைச் சொல்வதாயினும் சொல்லட்டும்; சான்றோர் - அறிவுடையோர்; பயனில சொல்லாமை நன்று - பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருத்தல் நல்லது.

அறிவுடையோர் விரும்பத்தகாத சொற்களைச் சொல்வதாயினும் சொல்லட்டும் ; பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருத்தல் நல்லது.

**8. அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்**
**பெரும்பயன் இல்லாத சொல்.**

அரும்பயன் - அரிய பயன்களை ; ஆயும் அறிவினார் - ஆராய்கின்ற அறிவுடையவர் : சொல்லார் - சொல்லமாட்டார் ; பெரும்பயன் இல்லாதசொல் – மிக்க பயனில்லாத சொல்லை.

அரிய பயன்களை ஆராய்கின்ற அறிவுடையவர் மிக்க பயனில்லாத சொல்லைச் சொல்ல மாட்டார்.

**9. பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த**
**மாசுஅறு காட்சி யவர்.**

பொருள் தீர்ந்த - பயனில்லாதவற்றை ; பொச்சாந்தும் - மறந்தும் ; சொல்லார் - சொல்லமாட்டார் ; மருள்தீர்ந்த - மயக்கமில்லாத ; மாசறு காட்சியவர் - குற்றமற்ற அறிவினை உடையவர்.

மயக்கமில்லாத குற்றமற்ற அறிவினை உடையவர்கள் பயனில்லாத சொற்களை மறந்தும் சொல்லமாட்டார்கள்.

10. **சொல்லுக சொல்லில் பயன்உடைய சொல்லற்க**
**சொல்லில் பயனிலாச் சொல்.**

சொல்லுக சொல்லில் பயன்உடைய - சொற்களில் பயனுடைய சொற்களைச் சொல்ல வேண்டும்.சொல்லில் பயனிலாச் சொல் சொல்லற்க - சொற்களில் பயனில்லாத சொற்களைச் சொல்லக் கூடாது.

சொற்களில் பயனுடைய சொற்களைச் சொல்ல வேண்டும்; பயனில்லாத சொற்களைச் சொல்லக் கூடாது.

*(தொடரும்...)*

# திருமந்திரம் காட்டும் ஆசிரியர்

முனைவர். த.ரா. குருமூர்த்தி
பேராசிரியர் மற்றும் வணிகவியல் துறைத்தலைவர்,
அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி.

ஆசிரியர்கள் நாட்டின் சொத்துக்களாகக் கருதப்படுகின்றார்கள். ஒரு நாட்டின் சமூக, கலாச்சார, பொருளாதார, தொழில்நுட்ப வளர்ச்சி உள்ளிட்ட ஒட்டுமொத்த வளர்ச்சிக்கு ஆசிரியர்களின் பங்கு போற்றத்தக்கதாகும். ஒரு நாட்டின் வளர்ச்சி நிலை வகுப்பறைகளில் நிர்ணயிக்கப்படுகின்றது என்று சொல்லப்படுவதும் உண்டு, மாணவர்களின் அறியாமையினைப் போக்கும் அருமருந்தாக ஆசிரியப் பணி கருதப்படுகின்றது. எழுத்தறிவித்தவன் இறைவன் என்கிற உயர்வான நிலையில் ஆசிரியர் அமர்த்தப்படுகின்றார், மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது நாம் தினந்தோறும் படிக்கும் மந்திரமாக இருக்கின்றது. இத்தகு சிறப்புமிக்க ஆசிரியரின் அறநெறிகளை. பன்னிரு திருமுறைகளில் பத்தாம் திருமுறையான திருமந்திரம் விளக்குவதை நாம் அறியலாம்.

*சத்தும் அசத்தும் சதசத்தும் தான்காட்டிச்*
*சித்தும் அசித்தும் சிவபரத்தே சேர்த்துச்*

*சுத்தம் அசுத்தம் அறச்சுகமான சொல்*
*அத்தன் அருட்குரு வாமவன் கூறிலே.* *திருமந்திரம் 2058*

உண்மை, பொய் என்கிற இரண்டையும் விரிவாக விளக்கி, உண்மைப் பொருளினை எப்பொழுதும் மாணவர்க்குக் கற்றுத்தர வேண்டும். வாழ்வின் உண்மையை உணர்வதே மாணவனின் நோக்கமாகும். மாணவனின் சித்தத்தில் கல்வியும் ஞானமும் உறைந்திட வேண்டும். அதற்கேற்ப ஆசிரியர் உழைத்திடல் வேண்டும். நமச்சிவாயவே ஞானமும் கல்வியும் என அப்பர் அறிவுறுத்தியுள்ளார். அனைத்து மாயைகளிலிருந்து மாணவன் விலக அருள் உபதேசம் தருபவர் ஆசிரியர். அகமாயை, புறமாயை இரண்டையும் உணர்த்தி அவற்றிலிருந்து விடுபடும் வழிகளையும் காட்டுபவர் ஆசிரியர் எனத் திருமந்திரம் உணர்த்துகின்றது.

மாணவனிடத்திலே பொதிந்திருக்கும் திறமையினை மாணவனுக்கு உணர்த்தி, வெளிக்கொணர்ந்து அதனைச் செம்மைப்படுத்தி, மாணவனின் வாழ்விற்கு உதவிட அதனை உயர்த்துவது ஆசிரியரின் பணியாகும். நீறு பூத்த நெருப்பு போலத் திறமைகள் மாணவர்களிடம் இருக்கும். நெருப்பின் மேல் உள்ள சாம்பலை நீக்கி, திறமையை வெளிக்கொணர்வது ஆசிரியரின் கடமையாகும்.

*தூறுபடர்ந்து கிடந்தது தூநெறி*
*மாறிக் கிடக்கும் வகையறிவாரில்லை*
*மாறிக் கிடக்கும்வகையறி வாளர்க்கு*
*ஊறிக் கிடந்ததேன் உள்ளன்புதானே.* *திருமந்திரம் 2867*

மாணவர்களிடத்திலே தூயநெறிகள், நன்னெறிகள், வாழ்வியல் நெறிகள், நன்னடத்தை முதலானவை தூசு படிந்திருக்கும். அந்தத் தூசினை நீக்கும் வகைகளை ஆசிரியர் அறிந்திருக்க வேண்டும். அவ்வாறு அறிந்து மாணவர்களை நெறிப்படுத்தும் ஆசியர்கள் மாணவர்களின் அன்பிற்கு என்றுமே உரியவர்களாக இருப்பார்கள். தூய நெறிகள் மீது படர்ந்துள்ள தூசிகளை நீக்க வல்லார்க்கு இறைவனின் அன்பு கிட்டும்.

மாணவர்களுக்குக் கல்வி புகட்டுகின்ற போது, ஆசிரியர் தம் மனத்தைத் தூய்மையாக வைத்திருக்க வேண்டும். கற்பிக்கின்றபோது தம் மனதிலிருந்து எதையெல்லாம் நீக்க வேண்டும் என்பதை ஆசிரியர் உணர்ந்து நீக்க வேண்டும். கற்பித்தலுக்குத் தடையாகத் தம்மிடமுள்ள குணங்கள் அனைத்தையும் நீக்க வேண்டும். இல்லையெனில் அது தனக்கே பகையாகும். நாட்டுக்கும் கேடாகும் எனத் திருமூலர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

*கற்பாய கற்பங்கள் நீக்காமல் கற்பித்தால்*
*தற்பாவங் குன்றும் தனக்கே பகையாகும்*
*நற்பா லரசுக்கு நாட்டுக்குங் கேடென்றே*
*முற்பாலே நந்தி மொழிந்து வைத்தானே.* திருமந்திரம் 2047

ஆசிரியர் என்பவர் உண்மையை உணர்ந்து கடைப்பிடிப்பவராகவும் கற்பிப்பவராகவும் இருக்க வேண்டும். படித்தல், உணர்தல், கற்பித்தல் ஆகியவற்றை மட்டுமே கொண்டு கடைப்பிடித்து நிறுவனத்தில் பணியாற்ற வேண்டும். ஒரு சித்தாந்தத்தை மாணவர்களுக்குக் கற்பிக்கும் போது, கற்றுக்கொள்வதில் எந்தச் சிக்கலும் இல்லாத வகையில் மாணவர்களுக்கு வழிகாட்ட வேண்டும். பணிவு என்பது தலையாய குணமாக எப்பொழுதும் இருக்க வேண்டும். கடுஞ்சொல், வசைபாடுதல் எண்ணத்தில் இருக்கக் கூடாது. தன்னைப் பற்றிய சிந்தனையிலேயே இருக்கக் கூடாது.

*உணர்வு ஒன்றுஇலா மூடன் உண்மை ஓராதோன்*
*கணுவின்றி வேதாகம நெறி காணான்*
*பணிவு ஒன்று இலாதோன் பரநிந்தை செய்வோன்*
*அணுவின் குணத்தோன் அசற்குரு வாமே.* திருமந்திரம் 2044

எனத் திருமூலர் தெரிவிக்கின்றார்.

பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி மெய்ஞானமாய் மிளிர்கின்ற மெய்ச்சுடரே எனச் சிவபெருமானைப் பற்றி மாணிக்கவாசகர் புகழ்கின்றார். ஒரு ஆசிரியர் என்பவர் மாணவனது அறியாமை என்னும் இருளைப் போக்கும் ஞானஒளியாக,

ஞானச்சுடராக இருக்க வேண்டும். ஆசிரியர் தான் சார்ந்த துறையிலே மெத்தப் படித்தவராக உயர்வான ஞானம் பெற்று ஞான ஆசிரியராகத் திகழவேண்டும். இல்லையெனில், ஆசிரியர் வாழ்வும், மாணவரது வாழ்வும் போற்றும்படியாக இருக்காது. இதனையே திருமூலர் கீழ்க்கண்ட பாடலில் விளக்குகின்றார்.

*குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லும் குருடர்*
*முரணும் பழங்குழி வீழ்வர்கள் முன்பின்*
*குருடரும் வீழ்வர்கள் முன்பின் அறவே*
*குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே.* *திருமந்திரம் 2048*

கண்பார்வை இல்லாதவரை, கண்பார்வை இல்லாதவர் கோல்காட்டி வழிநடத்திச் செல்லக்கூடாது. அவ்வாறு சென்றால் சரியாக வழிநடத்திட இயலாது. இருவரும் ஒருவர்பின் ஒருவராக படுகுழியில் விழுவர். ஒருவர் விழுந்தபின் மற்றொருவர் விழுவர். அறியாமையினை அகற்றும் ஞானஒளி இல்லாது ஞானக்குருடராய் இருக்கும் ஆசிரியர் கோல்காட்டி மாணவனை வழிநடத்திக் கற்பிக்கும் சூழல் ஏற்படின், ஒருவர் பின் ஒருவரல்ல, இருவருமே சேர்ந்து படுகுழியில் வீழ்வர். மாணவனை வழிநடத்தும் ஆசிரியர் அறிவாற்றலில் சிறந்து விளங்க வேண்டும் எனத் திருமூலர் அறிவுறுத்துகின்றார்.

மாணவர்களின் உள்ளத்திலே எந்தக் குறையும் இல்லாத சீர்மிகு சான்றோனாக ஆசிரியர் வீற்றிருக்க வேண்டும். குறைவிலா நிறைவே என்று சொல்லப்படுகின்ற அளவிற்கு ஆசிரியர் விளங்க வேண்டும். மாணவர்களின் உள்ளங்களில் உள்ள மாசுகளை, குறைகளை நீக்கித் தூயஉள்ளத்தை நல்கவல்லோனாக ஆசிரியர் திகழ வேண்டும். நித்தனாகவும், சுத்தனாகவும் இருக்க வேண்டும். நன்கு கற்றுணர்ந்த ஆய்ந்த நன்னெறியாளர்களாக நிற்கும் கல்வியாளர்களின் படைப்புகளையெல்லாம் ஆய்ந்து கற்று, அவற்றை அறியாத மாணவர்களுக்குக் கற்பிக்கும் திறன்கொண்டவரே ஆசிரியர் எனத் திருமூலர் கீழ்க்காணும் பாடலில் விவரிக்கின்றார்.

*நேயத்தே நிற்கும் நிமலன், மலம் அற்ற*
*நேயத்தை நல்கவல்லோன், நித்தன், சுத்தனே*
*ஆயத்தவர் தத்துவம் உணர்ந்தாங்கு அற்ற*
*நேயர்க்கு அளிப்பவன் நீடும் குரவனே. திருமந்திரம் 2053*

மாணிக்கவாசகர், சிவபெருமானை உருக்கத்துடன் போற்றிப் புகழ்கின்ற பல்வேறு பாடல்களில் ஆசிரியர் - மாணவர் உறவு அறியமுடிகின்றது. திருவாசகத்தில் கீர்த்தித் திருஅகவல் பதிகத்தில் கீழ்க்காணும் பாடல் இடம்பெற்றுருப்பதை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம்.

*தில்லை மூதூர் ஆடிய திருவடி*
*பல்லுயிர் எல்லாம் பயின்றனன் ஆதி*
*எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி*
*மண்ணும் விண்ணும் வானோர் உலகும்*
*துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்*
*என்னுடை இருளை ஏறத் துரந்தும்*
*அடியார் உள்ளத் தன்பு மீதூரக்*
*குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்.*

இப்பாடலில் மாணிக்கவாசகர் சிவபெருமானின் பெருமைகளை விளக்குகின்றார். இத்தகு பெருமைகளை ஒரு ஆசிரியன் பெற்றிருப்பானேயானால், அந்த ஆசிரியன் குருபகவானாகவே இருந்து மாணவர்களுக்கு உயரிய கல்வி கற்றுத்தந்திட முடியும். ஒரு ஆசிரியர் தமது துறை சார்ந்த கல்வியல்லாது பல்வேறுதுறை சார்ந்த கல்வியிலும் பாண்டித்யம் பெற்றிருக்க வேண்டும். மிகச்சிறந்த ஒழுக்கவாதியாக இருக்க வேண்டும். ஒழுக்கத்தைத் கற்பிக்கின்ற ஆசிரியர், ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்பதைக் கடைப்பிடிக்க வேண்டும். இன்றைக்கு எப்படிப்பட்ட கல்வி தேவை என்பதைக் கணித்து, வடிவமைத்து அதனை மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டும். இன்றைக்குப் பயன்படாத கல்வியைப் பயன்பாட்டிலிருந்து நீக்கிவிட வேண்டும். இதனைத்தான்

மாணிக்கவாசகர் துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும் எனச் சொல்கின்றார். மாணவன் உள்ளத்தில் இருக்கின்ற அறியாமை, முயலாமை, கல்லாமை என்கிற ஒட்டுமொத்த இருளினை நீக்கும் ஞானதீபமாக ஆசிரியர் விளங்க வேண்டும். வகுப்பறையில் பாடம் நடத்துவதோடு மட்டுமல்லாமல், மாணவர்களின் நெஞ்சங்களிலும் தங்கி ஐயங்களைப் போக்கிக் கொண்டேயிருக்க வேண்டும். இவையே தான் ஆசிரியரின் கொள்கைகள் என மாணிக்கவாசகரின் வரிகளிலிருந்து நாம் எடுத்துக்கொள்ளலாம்.

திருமூலரின் கருத்தினை ஒட்டி, ஆசிரியரின் சிறப்பியல்பினைக் குமரகுருபரர் தமது நீதிநெறி விளக்கத்தில் கீழ்க்கண்டவாறு அறிவுறுத்துகின்றார்.

*எவரெவர் எத்திறத்தர் அத்திரத்த ராய்நின்று*
*அவரவர்க்காவன கூறி - எவரெவர்க்கும்*
*உப்பாலாய் நிற்பமற்று எம்முடையார் தம்முடையான்*
*எப்பாலும் நிற்ப தென.* *நீதிநெறி விளக்கம் 97*

தமது வகுப்பறையில் உள்ள மாணவர்களின் குணநலன்களையும், கற்றல் குறித்த திறமைகளையும், மற்றதுறைத் திறமைகளையும் ஓர் ஆசிரியர் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். யார் யாரிடம் என்னென்ன திறமைகள் இருக்கின்றன என்பதைக் கணிக்க வேண்டும். மாணவர்களின் திறமைகளுக்கு ஏற்பத் தாமும் மாற வேண்டும். அவ்விதம் மாறி மாணவர்களின் திறமைக்கேற்ப எதிர்கால வாழும் வழியினைக் காண்பிக்க வேண்டும். இச்சமூகத்தில் அனைவரிலும் உயர்ந்தவராக ஆசிரியர் இருக்கவேண்டும். இதுவே அவரது உயரிய சொத்தாக, நற்பெயராக இருக்க வேண்டும். இத்தகு திறமை கொண்ட ஆசிரியர்களால் அறிவுப்புரட்சியும், திறமைப்புரட்சியும், அறிவியல் - தொழில்நுட்பப் புரட்சியும் ஏற்படும். நாடும் வளம் பெறும். மக்கள் நலம் பெறுவர்.

ஆசிரியர் தம்மைத்தாமே கண்காணித்துக் கொள்ள வேண்டும். தம்மைக் கண்காணிக்க யாரும் இல்லை என எண்ணிவிடக் கூடாது. நம்மை இறைவன் கண்காணிக்கிறார் என்கிற இறையுணர்வு

வேண்டும். இதனைத் திருமூலர் கீழ்க்கண்ட பாடலில் அறிவுறுத்துகின்றார்.

***கண்காணிஇல் என்று கள்ளம்பல செய்வார்***
***கண்காணி இல்லா இடம் இல்லை காணுங்கால்***
***கண்காணி யாகக்கலந்து எங்கும் நின்றானைக்***
***கஃண்காணி கண்டார் களவு ஒழிந்தாரே.*** *திருமந்திரம் 2067*

நம்மைக் கண்காணிப்பவர் இல்லை என நினைத்துத் தவறுகள் செய்துவிடக் கூடாது. நம்மைக் கண்காணிப்பவர் இல்லாத இடம் எதுவும் இல்லை. நம்மைக் கண்காணிக்கின்ற இறைவன் எல்லா இடங்களிலும் பரவி நின்று கண்காணிக்கிறான் என்கிற உணர்வு ஏற்படும் போது தவறுகள் இல்லாது போகின்றன. தவறுகளுக்கான எண்ணங்கள் அழிந்து போகின்றன. அனைத்துமே சிறப்பாக, நலமாக அமைந்துவிடுகின்றன. திருமூலர் அருளிய திருமந்திரத்தை ஒருமுறை ஆசிரியர்கள் வாசித்துப் பார்த்தால் ஆசிரியரின் சிறப்பியல் புகளையும், கொள்கைகளையும் தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.



# மடாலய நிகழ்வுகள்

27, 28, 29.05.2017 ஆகிய நாள்கள் கோவிலூர் மடாலயத்தில் சேக்கிழார் விழா நடைபெற்றது. முதல் நாள் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது. பெரியபுராணத்தில் பக்தி எனும் தலைப்பில் நீ.இரவிச்சந்திரன், இயற்கை பற்றி கு.சிவபாரதி, பெண்மை பற்றிப் முனைவர் தேவிநாச்சியப்பன், சமுதாயம் பற்றி மெ.ஜெயங்கொண்டான், தொண்டு பற்றிப் பொற்கிழிக் கவிஞர் கா.நாகப்பன் ஆகியோர் கவிதை பாடினர். பேரா.கார்மேகம் நன்றிக் கவிதை பாடினார்.

மறுநாள் முனைவர் விஜயசுந்தரி தொண்டர் சீர் பரவுவார் எனும் தலைப்பிலும், முனைவர் சபா.அருணாசலம் மன்னு தபோதனியார் எனும் தலைப்பிலும் உரை ஆற்றினர்.

**நாச்சியப்ப சுவாமிகளின் பிறந்த நாள் விழா**

கோவிலூர் மடாலயத்தின் 12ஆவது குருமகா சன்னிதானம் நாச்சியப்ப சுவாமிகளின் 95ஆவது பிறந்தநாள் விழா கோவிலூர் மடாலயத்தில் மாலையில் நடைபெற்றது. கோவிலூர் மடாலய மக்கள் தொடர்பு அலுவலர் டாக்டர் சே.குமரப்பன் வரவேற்றார். புதுக்கோட்டை திலகவதியார் ஆதீனத்தின் ஆதீனக்கர்த்தார் தவத்திரு. ஸ்ரீ தயானந்த சந்திரசேகர சுவாமிகள் திருக்களர் ஆண்டவர் வரலாறு வைராக்கிய சதகம் எனும் (கோவிலூர் மடாலயத்தின் கலாஷேத்திரா பப்ளிகேஷன்) நூல்களை வெளியிட்டு உரை ஆற்றினார். நூல்களைப் பெற்றுக்கொண்டு முனைவர் விசாலாட்சி சுப்பிரமணியன் உரையாற்றினார். நாச்சியப்ப சுவாமிகள் தாம் ஈட்டிய செல்வம் அனைத்தையும் கோவிலூர் மடாலயத்திற்கு வழங்கி ஆன்மீகம், தமிழ், கலை, பண்பாடு, கல்வி ஆகியவற்றை வளர்த்துக் கோவிலூர் மடாலயத்தை மக்கள் மடாலயமாக மாற்றிய பெருமைக்குரியவர் எனப் புகழாரம் சூட்டப்பெற்றது. போரா.கார்மேகம் நன்றி கூறினார்.

# திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## கடல் சுவற வேல் விட்டது

உக்கிரப் பெருவழுதி நல்லரசு செலுத்தி வந்த நாளிலே தருமங்கள் பலவும் செய்து புகழ் பரப்பி வந்தார். அசுவமேதயாகம் தொண்ணூற்றாறு செய்து முடித்தாகிவிட்டது. தனது பதவிக்கு ஆபத்து நெருங்கிக்கொண்டு வருகிறது என்பதை உணர்ந்த தேவேந்திரன் உக்கிரபாண்டியன் மேல் கடுஞ்சினம் கொண்டான். பாண்டிய நாட்டில் மழை வளம் மிகுந்ததாலே பாண்டியன் இவ்வாறு வேள்விகள் செய்ய முடிகிறது என்பதையும் கண்டான். தேவர்கோன் சூழ்ச்சி செய்யலானான். உடனே சமுத்திர ராஜனாகிய வருணனை வரவழைத்து, பிரளய காலத்திலே உலகினை அழிக்கவல்ல கடலைப் போலக் கோபம் கொண்டு மதுரையை வளைத்து அழிப்பாயாக என்று ஏவினான்.

மேலே விளைவுகள் அறியாப் பேதையான கடலரசனும் கட்டளையின்படி செய்யத் துணிந்தான். வளம் பொருந்திய மாமதுரையை விரைவிலே சூழ்ந்துகொண்டு அழிக்கும் கருத்து வைத்தான். கடல் பொங்கி எழுந்தது. உயர்ந்த பேரலைகள் ஆர்ப்பரித்து ஓங்கின. கடலரசன் தனது ஆமைப்படை, சுறாமீன் படை, அலைப் படைகள் முதலிய கொண்டு மதுராபுரியின்மீது படையெடுத்து வந்தான். மதுரைப்பதியின் கிழக்கே நெருங்கிப் பேரோசை புரிந்து கடல் பொங்கி வந்த நேரமோ நள்ளிரவு, உக்கிர வழுதி உறங்கிக் கொண்டிருந்தார். சிவபெருமான் சித்தர் வேடம் தாங்கி, மாறனே ! உனது பேரூரை அழிக்கும் பொருட்டுக் கடல் பூரித்து வருகிறது. ஆகையால், நீ விரைந்து சென்று உனது வேலாயுதத்தை எறிந்து வெற்றிகொள்வாயாக என்று இயம்பியருளினார். உடனே உக்கிர பாண்டியர் தொழுது எழுந்தார்.

கண்ட கனவினை உணர்ந்தார். அமைச்சரோடு விரைந்து சென்றார். பொங்கிப் பெருகிப் பேரொலி செய்துவருகின்ற சமுத்திரத்தைக் கண்டு அளவற்ற ஆச்சரியம் அடைந்தார். கனவிலே தோற்றங்காட்டி அருளிய சித்தர் பெருமான் நனவிலும் நேரே தோன்றினார். குமாரா ! நீ தாமதம் செய்யாதே. உனக்குற்ற பெரும் பகையே இக் கடலுருவம் கொண்டு வந்திருக்கிறது. அதனுடைய ஆற்றல் அழியும் வண்ணம் உனது வேலினை எறிந்து உலகினைக் காப்பாயாக என்று மொழிந்தருளினார்.

சித்தர் மொழி கேட்ட உக்கிரபாண்டியர் தனது வேலாயுதத்தை எடுத்து வலஞ்சுழித்துக் கடல்மேல் எறிந்தார். அவ் வேற்படையின் நுனி கடலில் தொட்ட மாத்திரத்திலே பழுக்கக் காய்ச்சிய இரும்பின் மேல் பட்ட சிறு நீர்த்துளி ஆவியாக மாறுவதை நிகர்த்து, சுறு சுறுவென்று சத்தமிட்டுக்கொண்டு வற்றி மிகவும் வலிமையிழந்து விட்டது. பெருங்கடல் பாண்டியன் கைவேலிடம் தோல்வியுற்றது. வேதவேள்வியைத் தடுத்து உலகினையே அழிக்கச் சூழ்ச்சி செய்த தேவராஜனின் எண்ணம் பலிக்கவில்லை.

அதுசமயம் உக்கிரவழுதியின் அருகிருந்த சித்த மூர்த்தியும் மறைந்தார். அதே கணம் சிவபெருமான் தமது உமாதேவியாருடன் ரிஷப வாகனத்தோடு வானத்தில் நின்று காட்சி தந்தருளினார். அத் திருக்கோலம் கண்ட மாறனும் புவியில் வீழ்ந்துவணங்கினார்.

அஞ்சலி கூப்பியபடியே உக்கிரர் திருக்கோயிலை அடைந்து வணங்கினார். மாதர் அஷ்ட மங்கலங்களையும் ஏந்தி எதிர்வர, தனது மாளிகையை மீண்டும் அடைந்தார்.

அதன் பின்னர் உக்கிரப் பெருவழுதி மதுரையம் பதிக்கும்

கடலுக்கும் இடையேயுள்ள விளை நிலங்களையும் ஊர்கள் முதலியவற்றையும் சிவபெருமானுக்கே உரிமையாக்கி நல்லாட்சி புரிந்து வரலானார்.

## இந்திரன் முடிமேல் வளை எறிந்தது

உக்கிரபாண்டியப் பெருவழுதி செங்கோல் ஆட்சி செலுத்தி வந்த காலத்திலேயும் கோள் நிலை திரிந்தது. மாரிவறங் கூர்ந்தது. மேகங்கள் மழை பெய்யாது நின்றன. பயிர்கள் கருகின. சேர சோழ பாண்டிய மென்னும் முத்தமிழ் நாடுகளிலும் வறுமைப் பிணிவாட்டி வதைத்தது.

அது கண்டு உளம் நொந்த முத்தமிழ் வேந்தரும் பரிகாரம் காணும் பொருட்டு அகஸ்திய மாமுனிவரைக் காணுமாறு பொதியமலை அடைந்தனர். குறுமுனிவரிடம் தமது வறுமைக் கதையைக் கூறினர். அகஸ்தியர் கிரக நிலையை ஆராய்ந்தார். மூவேந்தர்களே ! இனிமழை பொழிய வகையில்லை. கிரகாசாரப்படி பன்னிரண்டு வருஷங்களுக்கு மழை பெய்யாது. ஆகையால் நீங்கள் மழைக்கதிபனாகிய தேவேந்திரனிடம் சென்று முறையிடுதலே நல்லது என்றார். தேவேந்திரனைக் கண்டு வரச் சுவர்க்கலோகத்திற்கு எவ்வாறு நாங்கள் செல்ல இயலும்? என்று மூவேந்தரும் வினவினர். அப்போது அகஸ்திய மகரிஷி நீவிர் சோமவார விரதம் அனுஷ்டித்து வெள்ளியம்பலவாணரான நடராஜப் பெருமானின் திருவருள் பெற்று வான் வழி செல்வீராக என்று மொழிந்தார்.

பின்னர் குறு முனிவர் சோமவாரவிரதம் நோற்கும் முறைகளைச் சாங்கோபாங்கமாக எடுத்து விளக்கத் தொடங்கினார். சிறந்த தேவருள் சிறந்த தேவர் சிவபெருமான். சிறந்த சக்திகளுள் சிறந்த சக்தி உமாதேவியாரே. சிறந்த விரதங்களுள் சிறந்து விளங்குவது

சோமவார விரதமே சோமசுந்தரக் கடவுளுக்கே உரிய நன்னாள். சிவபெருமான் உமையோடு இசைந்திருப்பதால் சோமன் என்று அழைக்கப்படுகிறார். மதுரையிலே இச்சோமவார விரதம் நோற்றல் சாலவும் நன்று. அமாவாசைச் சோமவாரமாக இருந்தால் பெரும் பயன் அளிக்கும் என்று கூறி அம்மாமுனிவர் விரத வகைகளையும், செய்முறைகளையும் முடிக்கும் முறையையும் விரித்துரைத்தார்.

சோமவார விரத மகிமையினை அகஸ்திய முனிவர் விளக்கம் செய்யக்கேட்ட முத்தமிழ் வேந்தரும் அவரை வணங்கி விடை பெற்று, சோமசுந்தர க்ஷேத்திரமாகிய மதுரையம்பதிக்கு வந்து சேர்ந்தனர். பொற்றாமரைத் திருக்குளத்திலே நீராடிய பின்னர் சோமசுந்தரப் பெருமானையும் மீனாக்ஷியம்மையையும் உளமாரத் துதித்து சோமவார விரதத்தினை மேற்கொண்டு அதனைச் செவ்வையாகச் செய்து முடித்தனர்.

விரதத்தின் பலனைப்பெற்ற சேர சோழ பாண்டிய மன்னர் மூவரும் வான வழியே சென்று சுவர்க்கம் புகுந்து தேவேந்திர நகரை அடைந்தனர். தேவேந்திரன் முப்பெரு மன்னர் இருக்கும் பொருட்டு மூன்று சிங்காதனங்கள் இடச் செய்தான். அவர்களது ஆசனங்கள் தாழ்வானவையாக இருந்தன. சேரனும் சோழனும் இட்ட அரியணையின் மீது அமர்ந்துவிட்டனர். ஆனால் உக்கிரப் பெருவழுதி மட்டும் இருக்கையின் தாழ்ச்சியை உணர்ந்து இந்திரனது சிம்மாசனத்தில் ஏறி அவனுக்குச் சமமாக அமர்ந்து கொண்டார். இது கண்டு பொறாத தேவர்கோன் சேரனையும் சோழனையும் மட்டும் நோக்கி முகமன் கூறி, வந்த காரியம் யாது? என வினவினான். அவர்கள் தமது நாட்டிலே மழையின்மையால் பஞ்சம் மலிந்தது தெரிவித்து மழை வேண்டிநின்றனர். இந்திரன் மகிழ்ந்தான்.

அவ்விருவர் நாடுகளில் மட்டும் மழை பெய்ய அருளினான். அவர்கட்கு, பொன்னணி, நல்லாடை தந்து விடை கொடுத்தனுப்பினான்.

சேர சோழ மன்னர்கள் சென்ற பின்பு இந்திரன் உக்கிரபாண்டியன் கர்வத்தோடு தன்னருகே அமர்ந் திருப்பதையும் மேற்கொண்டு மழை வேண்டாதிருக்கும் பெருமிதத்தையும் உன்னி, சூழ்ச்சியொன்று கருதினான். மிகவும் உயர்ந்த சிறப்புச் செய்பவனைப் போல, பல ஏவலர் தாங்கி வந்த முத்துமாலை ஒன்றைப் பாண்டியனுக்கு அன்புடன் கொடுத்தான். வழுதியும் அம்மாலையை ஏற்றுப் பூமாலையைப் போல அணிந்து கொண்டார். பெரும் பாரம் கொண்ட முத்துமாலையைத் தாங்கி வழுதியிருக்கும் பான்மை கண்ட இந்திரன் வியந்து ஆரம் தாங்கு பாண்டியன் என்று அழைத்தான். உக்கிரவர்மர் அப்பெருமையைச் சிறிதேனும் இலட்சியம் செய்யவில்லை மதுரையூருக்கு மீண்டு விட்டார்.

இந்திரன் ஆணையாலே சேரமும் சோழமும் மழை நிரம்பப் பெற்று வளமிக்கோங்கின. பாண்டியத்திலே மழைப் பொழிவையே காணோம். வற்கடம் நிலைத்தது.

உக்கிரப் பெருவழுதி ஒரு நாள் பொதிய மலையைச் சார்ந்த சந்தன வனத்திலே விலங்குகளை வேட்டையாடிக் கொண்டிருந்தார். அது சமயம் புஷ்கலா வருத்தம், சங்காரித்தம், துரோணர், காளமுகி என்ற நான்கு மேகங்களும் பொதிய மலையிலே தாழ்ந்து மேய்ந்து கொண்டிருத்தலைக் கண்ணுற்றார். உடனே அவற்றைப் பிடித்துக் கட்டி, விலங்கிட்டுக்கொண்டு சென்று சிறைச்சாலையில் இடுவித்தார். இது தெரிந்த தேவர் கோன் கடுஞ்சினம் கொண்டு சமர் கருதிப் புறப்பட்டான். வரும் வழியிலே, மனிதன் ஒருவன் கடல் சுவற வேல்விட்டதையும், மிகவும் பாரமான ஆரத்தைத் தாங்கிய ஆற்றலையும் எண்ணி எண்ணி மன முடைந்தான்.

உக்கிர வழுதியுடன் போர் தொடுக்கக் கருதித் தனது தேவப் படைகளோடு மதுரைமாநகரைச் சூழ்ந்து கொண்டான். பாண்டியனது ஒற்றர்கள் உடனே ஓடோடியும் வந்து வணங்கி விஷயத்தைத் தெரிவித்தனர். உக்கிரவர்மர் சினமும் மானமும் மிகுந்தார். சதுரங்க சேனைகளுடன் போருக்குக் கிளம்பினார். தங்களோடு சண்டையிட வந்தார் யார் எனறு எண்ணிப் பாராத தேவர்கள் கோஷமிட்டு நெருங்கிவந்து ஆயுதங்களை வீசினர்.

தேவர் படைக்கும் பாண்டியர் படைக்கும் இடையே எழுந்த போர் கடுமையாகவும் அச்சம் விளைவிப்பதாகவும் இருந்தது. பேரிகை விளைவாகக் கூளிப்பேய்கள் தம் தலைவி கொற்றவையை வாழ்த்திக் களிக் கூத்தாடின. அனைத்தையும் எதிர்த்து முறித்தன பாண்டியன் படைகள். பின்னர் இந்திரனும் வழுதியும் மல்யுத்தம் புரிந்தனர். இந்திரன் தனது வச்சிராயுதத்தைப் பிரயோகம் செய்தான். உக்கிர பாண்டியரும்தன் கையிலிருந்த சக்ராயுதமான வளைப்படையைச் சுழற்றி வீசினார். வளை சென்று வச்சிராயுதத்தை எதிர்த்தொதுக்கிவிட்டு இந்திரனது முடியைத் தாக்கிக் கீழே வீழ்த்திச் சிதைத்துவிட்டது. வெட்கமும் அச்சமும் உற்ற தேவர்கோன் ஓடினான். சிவபெருமான் திருவருள் இந்திரனது தலைக்கு வந்த ஆபத்தை முடியோடு போக்கியது.

பொன்னுலகில் புகுந்துகொண்டு இந்திரன் உக்கிரவழுத்திக்குத் திருமுகம் ஒன்று வரைந்தனுப்பினான். அதிலே பாண்டி நாட்டிற்கு மழை வளம் தருகிறேன். தளைப்பட்டுள்ள எனது நான்கு மேகங்களையும் விடுவிப்பாயாக, எனக் கோரியிருந்தான். ஸ்ரீமுகம் கொணர்ந்த தேவதூதன் வழுதியின் அடிபணிந்து ஒடுங்கி ஒதுங்கி ஓலையை நீட்டினான். அங்கிருந்தவன் ஓலையை வாங்கி ஓலையைப் படித்துக் காட்டினான். செவிமடுத்த பெருவழுதி இந்திரன் மேல்

நம்பிக்கை கொள்ளவில்லை. மேகங்களை விடுவிக்க மனம் ஒப்பவில்லை. அதுசமயம் அருகே இருந்த இந்திரனின் நண்பனான ஏகவீரன் என்ற வேளாளன் பெருவழுதியே ! நான் பிணையாக இருப்பேன் என்று கூறி வணங்கினான். வேளாளன் சொற்களை வேந்தர்கோன் நம்பினார். சிறைப்பட்ட நான்கு மேகங்களின் தளைகளை நீக்கச் செய்து விடுதலை வழங்கியருளினார். மேகங்கள் மேலெழுந்து சென்றன.

இந்திரனது ஆணையால் பின்னர் பாண்டிப் பெரு நாட்டிலே மழை மாதம் மும்மாரி பொழிந்தது. ஆறு, குளம், ஏரி, வாவி, மடு முதலியன நீர் நிரம்பின. பாண்டி நன்னாடு பசுமை பெற்றுப் பொலிவுடன் துலங்கியது.

*(தொடரும்)...*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

– பதிப்பாசிரியர்